# மூதுரை - ஔவையார்

**பேரா. முனைவர் த. டான் ஸ்டோனி**
தமிழ்த்துறை
இலயோலா கல்லூரி
சென்னை

# சார்ந்து வாழ்வதே வாழ்க்கை

நமக்குப் பயன் தரும் அரிசியே ஆனாலும்,
அது உமி இன்றி முளைப்பதில்லை.
அது போலவே பேராற்றல் உடையவர்கள் செய்யும் செயலும்
அடுத்தவர் துணையின்றி முடிவதில்லை

# பாடல்

பண்டு முளைப்பது அரிசியே ஆனாலும்
விண்டு உமி போனால் முளையாதாம் கொண்ட பேர்
ஆற்றல் உடையார்க்கும் ஆகாது அளவின்றி
ஏற்றம் கருமம் செயல்

- ஔவையார்

# யாரையும் குறைத்து மதிப்பிடக் கூடாது

தாழம்பூவின் மடல் பெரிதாக இருந்தாலும் வாசம் தருவதில்லை. ஆனால் அதனின் சிறிய மகிழம்பூவோ நல்ல வாசனையைத் தருகிறது.

பெருங்கடலின் நீர் துணி தோய்க்கக் கூட உதவுவதில்லை,

ஆனால் அதனருகிலேயே தோன்றும் சிறு ஊற்று குடிப்பதற்கும் நல்ல நீரைத் தருகிறது.

எனவே உருவத்தை வைத்து ஒருவரை எடை போடக் கூடாது.

# பாடல்

மடல் பெரிது தாழை; மகிழ் இனிது கந்தம்
உடல் சிறியர் என்று இருக்க வேண்டா - கடல் பெரிது
மண்ணீரும் ஆகாது; அதன் அருகே சிற்றூறல்
உண்ணீரும் ஆகிவிடும்

ஔவையார்

# மரம் என்பது எது?

கிளைகளோடும், கொம்புகளோடும் காட்டில் நிற்பவை மரங்கள் அல்ல.

சபையின் நடுவே ஒருவர் தரும் ஓலையில் எழுதியிருப்பதைப் படிக்கத் தெரியாதவனும், அடுத்தவர் மனதை அறியாதவனுமே மரம் போன்றவன்

# பாடல்

கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்லமரங்கள் - சபை நடுவே
நீட்டு ஓலை வாசியா நின்றான் குறிப்பு அறிய
மாட்டாதவன் நன் மரம்

ஔவையார்

# பயிற்சி இல்லாமல் செய்யும் முயற்சிகள்

**விளக்கம்**

காட்டில் மயில் ஆடுவதைப் பார்த்த வான்கோழி

உடனே தன்னையும் அதைப் போலவே நினைத்து

தன்னுடைய குட்டியான சிறகை விரித்து ஆடுவதை போன்றதே,

கல்வி கற்காதவன் சொல்லும் கவிதையும், அதனால் ஒரு பயனும் இல்லை. விஷயமும் இல்லை.

## பாடல்

கான மயில் ஆடக் கண்டிருந்த வான் கோழி
தானும் அதுவாக பாவித்துத் - தானும் தன்
பொல்லாச் சிறகை விரித்து ஆடினாற் போலும்
கல்லாதான் கற்ற கவி

ஔவையார்

# உறவினர்கள் எப்படி இருக்க வேண்டும்?

குளத்தில் நீர் வற்றிய உடன் விலகிச் செல்லும் பறவைகள் போல, நமக்குத் துன்பம் வந்தபோது நம்மை விட்டு விலகிச் செல்பவர்கள் உறவினர் அல்லர்.

அந்தக் குளத்திலேயே சேர்ந்து வாடும் கொட்டி, அல்லி, நெய்தல் கொடிகளைப் போல, நம்முடனேயே நம் துன்பங்களையும் பகிர்ந்து கொள்பவர்களே நல்ல உறவினர்கள்

அற்ற குளத்தில் அறு நீர்ப்பறவை போல்
உற்றுழித் தீர்வார் உறவு அல்லர்; அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி உறுவார் உறவு